உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# உலகுடைய நாயனுர் கழிநெடில் முதலியன.



கர — சித்திரை — கவ

1951.

திருவாவடுதுறை யாதீன வெளியீடு — 38.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.



# உலகுடைய நாயனர்

# கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

# பெரிய பிள்ளை திருவெண்பா

# ஆனந்தக்களிப்பு

முதலியன.

இவை

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை யாதீனத்து
இருபத்தோன்ருவது குருமகா சந்நிதானம்
**ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக சுவாமிகள்**
கட்டளையிட்டருளியபடி

---

அவ்வாதீன வித்துவான்
**த. ச. மீனுட்சிசுந்தரம் பிள்ளையால்**
பரிசோதித்து
எழுதப்பட்ட குறிப்புரையுடன் அச்சிடப்பெற்றன.

---

கர — சித்திரை — கூஉ

1951.



திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை யாதீனத்து
20-வது குருமகா சந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ அம்பலவாண தேசிக பரமாசாரிய சுவாமிகள்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# முகவுரை.

"கயிலாய பரம்பரையிற் சிவஞான போதநெறி
காட்டும் வெண்ணெ
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பாநு வாகிக்
குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ் குருநமச்சி
வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் றிருமரபு நீடூழி
தழைக மாதோ."

ஸ்ரீ மாதவச் சிவஞான யோகிகள்

திருக்கயிலாய பரம்பரைத் திருநந்திமரபு ஸ்ரீ மெய்கண்ட தேவருடைய சந்தானத்து உபதேச பரம்பரையிலே வந்த திருவாவடுதுறை ஆதீனத்துப் பிரதம பரமாசாரியராகிய ஸ்ரீ நமசிவாய தேசிக மூர்த்திகளுக்குப் பின் இருபதாவது குருமகா சந்நிதானமாக எழுந்தருளியிருந்து 12—4—51-ல் சிவபரிபூரண மெய்திய ஸ்ரீ-ல-ஸ்ரீ அம்பலவாண தேசிகமூர்த்திகள் நினைவு மலராக இப்பொழுது இவ்வெளியீடு வருகிறது.

இனி, இவ்வெளியீட்டு மலரில் ஸ்ரீ உலகுடையநாயனார் அருளிச்செய்த கழிநெடிலடி ஆசிரிய விருத்தமும், சிவபுரம் — ஸ்ரீ பெரிய பிள்ளை அருளிய திருவெண்பாவும், இவ்வாதீனத்து மூன்றாவது குருமகா சந்நிதானம் ஸ்ரீ அம்பலவாண தேசிக மூர்த்திகளைப்பற்றிய தோத்திர நூலாக உள்ளன. சாத்திரக் கருத்துக்களே மிகுந்து விளங்குவன. சிறு சிறு நூலாயினும் பல அரிய பெரிய சாத்திரக் கருத்துக்களை விரித்துக் கூறுவதற் குரிய அட்டவணை போல் உதவுவன இவை என்பதை அறிஞர்

உணர்வார்கள். ஆனந்தக்களிப்பை அருளிச்செய்தவர்கள் தொட்டிக்கலை — மதுரகவி — ஸ்ரீ சுப்பிரமணிய முனிவர் என்பவர். இம் முனிவர் பெருமான் ஸ்ரீ மாதவச்சிவஞான சுவாமிகள் மாணவருள் ஒருவர் ஆவார்கள். இவ் வானந்தக் களிப்பிலே பாராட்டப் பெறும் ஸ்ரீ அம்பலவாண தேசிக மூர்த்திகள் இவ்வாதீனத்திலே பதின் மூன்றாவது குருமஹா சந்நிதானமாக எழுந்தருளியிருந்தவர்கள்: இவர்களுடைய ஞானசிரியர். சம்பிரதாயங்கள் பல இக்களிப்பிலுங் காணலாம்.

ஸ்ரீ அம்பலவாண தேசிக பரமாசாரிய சுவாமிகள் தென் பாண்டி நாட்டிலே திருநெல்வேலிச் சீமையிலே கொற்கை நகரத்திலே அவதரித்தவர்கள். கல்வி கற்றுச் சிறந்து தமது பத்தொன்பதாம் பிராயத்திலே இவ்வாதீனத்தைச் சேர்ந்த செவ் வந்திபுரத்திலே தட்சிணம் காறுபாறாக அப்போது எழுந்தருளி யிருந்த ஸ்ரீ வைத்தியலிங்கத்தம்பிரான் சுவாமிகளை அடைந்து தமக்குள்ள துறவு விருப்பத்தையும் இவ்வாதீனத்துத் திருக் கூட்டத்திலே சேரவிருக்கும் மீதூர்ந்த ஆசையையும் தெரிவித் தார்கள். அவர்கள் இவர்களைச் சோதித்து வேதாந்த நூற் பயிற்சியால் உண்டாகிய துறவுள்ளத்தைக்கண்டு வியந்து இவ்வாதீன முறைப்படி மூவகைத் தீட்சையும் செய்து கல்லாடையும் அருளினார்கள். பிள்ளைத்திருநாமம் வைதண்டம பிள்ளை என்பது. தீட்சாநாமம் வைத்தியலிங்கத் தம்பிரான் என்பர். பின்பு திருவாவடுதுறை ஆதீனத்திலே அப்பொழுது 17-வது குருமகா சந்நிதானமாக எழுந்தருளியிருந்த ஸ்ரீ அம்பல வாண தேசிக மூர்த்திகளைத் தரிசித்து அவர்கள் கட்டளைப்படி அணுக்கத்தொண்டுகள் செய்துகொண்டு இவ்வாதீன வித்து வானக இருந்து பின்பு மதுரைத் தமிழ்ச்சங்கத்திலே சைவ நூற் பரிசோதகராக ஸ்ரீமான் பாண்டித் துரைசாமித்தேவர் அவர் களால் நியமிக்கப்பெற்றுப் பல நூல்களை அச்சிட்டுதவியும் பல நன்மாணவர்கட்கு இவ்வாதீனத்துக் கல்வியை முறையாகப்

பயிற்றியும் விளங்கிய சேற்றூர் ரா. சுப்பிரமணியக்கவிராயர் அவர்களிடத்துத் தமிழ் இலக்கிய இலக்கண நூல்களையும் சைவ சித்தாந்த நூல்களையும் முறையாகக் கற்றார்கள். திருமுறைகளிலும் நல்ல பயிற்சி பெற்றார்கள். திருமூல நாயனார் அருளிச் செய்த திருமந்திரமாலையிலே அவர்கட்கு மிகப் பற்றிருந்தது.

பின்பு திருப்பெருந்துறைக் கட்டளைத் தம்பிரான் சுவாமிகளாக இருந்து பணியாற்றி வந்த காலத்திலே யாவரும் அதிசயிக்குமாறு அவர்கட்குத் திருமந்திர உபதேசம் கிடைத்தது. ஸ்ரீ வித்தியா உபாசனையும் உடையவரானார்கள். அதன் பின்பு அவர்களுடைய நிர்வாகத் திறன் முதலிய எல்லாவற்றையும் கருதி இவ்வாதீனத்துப் பத்தொன்பதாவது குருமகாசந்நிதானம் ஸ்ரீ வைத்தியலிங்கதேசிகமூர்த்திகள் திருவிடைமருதூர்க் கட்டளையில் வைத்தருளினார்கள். திருப்பெருந்துறை, திருவிடைமருதூர் முதலிய இடங்களில் கட்டளையில் இருந்து மிகவும் நன்றாக நிர்வாகம் செய்து மகாசந்நிதானத்துக்குத் திருவுளமகிழ நடந்து கொண்டார்கள். ஆதலால் ஸ்ரீ வைத்தியலிங்க தேசிகமூர்த்திகள் தமக்குப்பின் அவர்களையே பட்டத்திலிருத்த நன்கு திருவுளம்பற்றியிருந்தார்கள். ஸ்ரீ பஞ்சாக்கர பரமாசாரியருடைய திருவருட்குறிப்பும் அவர்கள்பால் சிறந்தோங்கியது. அதனால் ஸ்ரீ வைத்தியலிங்க தேசிகமூர்த்திகள் ஈசுவர ஆண்டு ஐப்பசித் திங்கள் 24-ஆம் நாள் செவ்வாய்க்கிழமை அபிஷேகம் செய்து அம்பலவாணதேசிகர் என்னும் அபிதானமும் அருளித் தாம் 26-ஆம் நாள் வியாழக்கிழமையன்று மாயூரத்திலே சிவபரிபூரணமெய்தினர். தமது ஞானாசிரியருடைய குருமூர்த்தம் பத்து நாட் குருபூசையும் சிறப்பாகச் செய்து ஞானபீடத்தெழுந்தருளியிருந்து ஞானச்செங்கோல் செலுத்தினார்கள். அவர்களுடைய அவதாரதினம் மன்மத — மார்கழி — ரோகணி நாள் என்ப. பீடாதிபதியாக எழுந்தருளிய காலந்தொடங்கித் தமது ஆதீன முன்னேற்றத்தையே மிகவும் திருவுளத்தடைத்து எல்லா வகையிலும் சிறப்புறச்செய்தார்கள். பொதுமக்களுக்கு வேண்டிய

கல்வி, மருத்துவம், முதலிய இன்னோரன்ன உதவிகள் பல செய்தார்கள். செந்தமிழ் மொழி வளர்வதற்கு ஆவன எல்லாம் சிறக்கச் செய்வித்தார்கள். ஆதீன வித்துவான்களைக் கொண்டு அரிய நூல்கள் பல ஆராய்ந்து அச்சிடுவித்து அன்பர் கட் கெல்லாம் அளித்தருளினார்கள். காட்சிக்கு எளியவர்களும், கடுஞ்சொல் இன்னதென்பதை அறியாத சாந்த சீலர்களும் ஆகிய மகா சந்நிதானம் அவர்கள் அன்பர்களும் அடியார் களும் வேண்டிக் கொண்டபடி தென்னாட்டுச் சிவதல யாத்தி ரைக்குத் தம்பிரான் சுவாமிகள் அனைவருடனும் எழுந்தருளி அங் கங்கே சிவதரிசனம் செய்து வழிபாடாற்றி அடியார்கட்குத் திருதரிசனக் காட்சியும் தந்து உலகமெல்லாம் ஒருங்கே ததுகளிக் கத் திரும்பி விகிர்தி — தை — 29உ தமது சிவராசதானியாகிய திருவாவடுதுறைக்கு எழுந்தருளிப் பரமாசாரியராகிய ஸ்ரீ பஞ்சாக் கர தேசிக மூர்த்திகள் திருபூஜையும் சிறப்பாகச் செய்வித்து யாவரும் மகிழ வீற்றிருந்தருளினார்கள். யாத்திரை செய்துவந்த காலத்து இடைவிடாத யாத்திரையால் உண்டான திருமேனிப் பாங்கின் குறைவால் மகாசந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ அம்பலவாண தேசிக மூர்த்திகள் திருவிடைமருதூரிலே விகிர்தி — பங்குனி — 30-ஆம் நாள் வியாழக்கிழமை சிவபரிபூரணமடைந்தார்கள்: புகழுடம்பில் நிலைபெற நின்றருளுகின்றார்கள்.

இப்பொழுது இவ்வாதீன முறைப்படி ஸ்ரீ பஞ்சாக்கர தேசிக பரமாசாரியசுவாமிகளுடைய ஞானபீடத்திலே அவர் களுக்குப்பின் இருபத்தோன்றாவது குருமஹா சந்நிதானமாக எழுந்தருளி ஞானச்செங்கோல் கைக்கொண்டு செலுத்தும் **ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசாரிய சுவாமிகள்** கட்டளையைச் சிரமேற்கொண்டு "கழிநெடிலுக்கு"க் குறிப்புரை ஒன்றும் என் அறிவு சென்ற அளவில் எழுதிச்சேர்த்து வெளி யிடலானேன். குற்றம் பொறுத்தருளுமாறு பெரியோர்களை வேண்டிக்கொள்கிறேன்.

இங்ஙனம்,

திருவாவடுதுறை, 22—4—51.

க. ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளை,
ஆதீன வித்துவான்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்.

# உலகுடைய நாயனார்

## கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.

---

மலமெனுந் தடத்திற் கருமசே தகத்தின்
மாயையாங் கிழங்கிலங் குரித்து
மன்னுமூ வெட்டாந் தத்துவ நாள
மலரிதழ் வித்தையேழ் வித்தை
நலமிகு மீசன் சதாசிவ மிரண்டு
நண்ணுகே சரங்களாஞ் சத்தி
நற்பொகுட் டாகு நாதமே விந்து
நயந்தகண் ணுமென விரவி
இலகுமென் னுடலப் பதுமபீ டிகை
யிருந்தரு ளாசன மெனுமல்
எனதுபுக் கிலதா யெண்ணினேன் றெளிய
வியலருட் பார்வைதந் தனையே
அலகிலா வுயிர்கண் மலநடைக் கிலையா
யருணடைக் குண்மையாய் நின்ற
ஆவடு துறைசை யம்பலவாணு
வடியவர்க் கருளுமா நிதியே. (1)

புசிப்பினுல் வினையாற் சகலனு மென்பாற்
புசிப்பொடு வினையுமாய்ப் புகுந்து
புல்லிய வரவின் வாய்மணி கொள்வார்
போன்மலத் தினைவெளிப் படுத்தி

நசிப்பிலாக் கருணை யுருவமாய் வந்து
ஞானபா தத்தையீ ரைந்தா
நண்ணுகா ரியத்தா லெனக்குப தேச
நல்குநின் பெருமைநா னறியேன்
வசிக்குமைந் தொழிலின் மலநடை நான்காய்
மற்றொரு தொழிலரு ணடையாய்
மன்னுயிர்க் கிரங்கி நடத்தொழில் புரியும்
வள்ளலே மருவுசித் திடத்தும்
அசித்தினு நீங்கா தகண்டமாய் நிறைந்த
வருட்பரி பூரணக் கடலே
ஆவடு துறைசை யம்பல வாண
வடியவர்க் கருளுமா நிதியே. (2)

சீவனே வியாபி யவத்தையி லிழிந்து
திரும்புதல் குற்றமாங் கருவி
சேருதல் பிரித லில்லையா முறையிற்
செயற்படுங் கருவியே தெரியுந்
தாவிலா வறிவு தங்கின விடமே
தகுமுயிர்க் கிருப்பிட மென்று
சாற்றியென் னுளத்தி லையமுந் திரிவுந்
தவிர்த்தெனை யாண்டுகொண் டனையே
பாவனை கடந்த வுனைவச மாக்கப்
பாசமும் பசுவுமா ஞானம்
பற்றிநாட் டத்தை முகிழ்த்துவாய் நீரைப்
பசையறப் பருகுவார் தங்கள்
ஆவல்சேர் நிட்டை யபாயமாய்க் கருதி
யதற்கியல் பிணையளித் தவனே
ஆவடு துறைசை யம்பல வாண
வடியவர்க் கருளுமா நிதியே. (3)

நாலுகை தனிலே நாலுகை யமைப்பு
நற்றுடி முளரியை நயந்து
நளினபா தத்தி னொன்றெடுத் தொன்றை
ஞானவான் பொதுவிலே நாட்டிக்
கோலமார் கூத்து விடாதநீ யுன்றன்
குலமிரண் டென்குல மிரண்டுங்
குறுகிடா வண்ண மின்பமா யென்பாற்
கூத்தையுங் கொண்டதெப் படிதான்
ஏலுமா மலர்க்காய் நாசிகை வேழ
மெறிந்தநீ சினகரந் தகர்க்க
எப்படி பொறுத்தா யிதற்குமேல் வினையு
மில்லையென் றுரைத்தது மிலையோ
ஆலநீ முலிலே யயன்றரு புதல்வர்க்
காகம முரைத்தபூ ரணனே
ஆவடு துறைமசை யம்பல வாணு
வடியவர்க் கருளுமா நிதியே. (4)

முந்தநான் செய்த விதத்தினுக் கிதமே
முடித்தவா பிறப்பினை முடிப்பாய்
மூளுமிக் காலத் திவ்வுடல் வினையை
முற்றுநின் றெழிலெனக் கொள்வாய்
நந்திடா வென்னை யுனக்குட லாக்கி
நண்ணுமென் னுயிருமாய் நயப்பாய்
நாடிலுன் கருணைக் கேற்றகைம் மாறு
நான்செய முடியுமோ நவில்வாய்
சிந்தைமெய் வாக்கு மூன்றினு முயிர்கள்
செய்வினை கொடுத்திட வதற்காத்
தேகமே கொடுத்து மலபரி பாகஞ்
செய்தறி வினிற்பவ முடித்த

அந்தமார் குரவர் சிகாமணி நீயே
யண்ணலே யென்னுயிர்க் கமுதே
ஆவடு துறைசை யம்பல வாண
வடியவர்க் கருளுமா நிதியே. (5)

காந்தமுன் கரும்பொன் கதிரின்முன் படிகங்
ககனநேத் திரவொளி தாரை
கலைமதி பொருந்துந் தன்மையா யுனது
கருணையி னுள்ளுறக் கலந்து
மாந்திய கனியு மதுரமும் பண்ணு
மருவுறு மோசையு முடலும்
மன்னிய வுயிரும் போலமூன் றில்லா
வகையிரண் டல்லது மானேன்
ஏய்ந்தமூன் றவத்தை யுயிரினுக் கநாதி
யிருக்கினும் வினைமுதிர்ச் சியினால்
இரண்டுமுன் னடாத்தி மலபரி பாக
மியற்றிமற் றொன்றையீ ரைந்தாய்
ஆய்ந்தகா ரியமா வவத்தையோ ரைந்தி
னடக்கினா னறிந்திடச் செய்த
ஆவடு துறைசை யம்பல வாண
வடியவர்க் கருளுமா நிதியே. (6)

என்னையு முனையுந் தன்னையுங் காட்டா
திந்திய விடயமே காட்டி
இயல்வினை மாயை யிரண்டையு மெனையு
மிணக்கிய வாணவ மலத்தின்
தன்னுறு வழிநின் சத்தியை நடாத்தித்
தகுமதன் சத்திக ளெல்லாந்
தயங்குநின் னுருவ மூன்றினுன் மாற்றித்
தாணிழ றந்துகாத் தனையே

கன்னலங் கழனிக் காழிமா நகரிற்
கவுணிய னிரண்டுஞா னமுமே
கற்றிடா துணர வீர்க்கிடை போகாக்
கதிர்முலைப் பால்கறந் தளித்த
அன்னைதன் பசுவாந் தன்மையை யகற்றி
யாதரித் தருள்கொடுத் தவனே
ஆவடு துறைசை யம்பல வாணு
வடியவர்க் கருளுமா நிதியே. (7)

தணவிலா மலத்தின் குருடனேற் குடலந்
தாலொரு கோலெனக் கொடுத்துச்
சத்தமே யாதி விடயமோ ரைந்தின்
றன்வழி புசித்திடத் தந்து
குணவழி நடவார் குணவழி நடந்து
குணத்தினைத் திருப்புவார் போலக்
கொடுவினை யொப்புச் சத்திநி பாதங்
கூர்மல பாகமுங் குறித்தே
இணையிலா வின்ப வடிவமா முன்னே
டென்னையு மிரண்டற வைத்தாய்
ஏழையே னுன்ற னடியருக் கடியா
னென்னவும் பற்றிலே னரவின்
அணைதுயி லெழுந்தே யருவிகண் பொழியு
மரியரிக் குரைத்தகூத் துடையாய்
ஆவடு துறைசை யம்பல வாணு
வடியவர்க் கருளுமா நிதியே. (8)

இருங்கடன் மணலை யெண்ணினு முவர்நீ
ரிவ்வள வெனவளந் திடினும்
இருவினைக் கீடா வெடுத்தவென் னுடல
மெண்ணிறந் தனவிவை யொழிய

வருஞ்சிவ தருமந் தன்னிலுன் றிருமுன்
வந்தனை செய்துனக் களிக்க
வாய்த்தவிவ் வுடலே யெனக்குப கார
மாகவே வந்திடு முடல்காண்
பெருஞ்சிவ னடியார் வேடமுற் றிடாநான்
பிறனெனத் திருவுளத் துருமற்
பேதையேன் றன்பா ஞேக்கொடு பரிசம்
பிறங்குபா வனைத்தொழில் பெருக்கி
அருந்திறன் மலந்தீர்த் தறிவினைத் திருப்பி
யாண்டருள் கருணையங் கடலே
ஆவடு துறைசை யம்பல வாணு
வடியவர்க் கருளுமா நிதியே. (9)

முந்துமா கமத்தை யருட்டுறை யண்ணன்
மொழிபெயர்த் துரைத்தநூன் முதலா
முதல்வழி சார்பா மூன்றுநூற் கருத்து
முறைதெரி யாமலே கருதி
நந்தவே யெழுது முரைதனைக் குருவாய்
நாடிய குரவரை நம்பி
நற்கதி யடையா வுயிர்களுக் கிரங்கி
நற்கதி கொடுத்திட வேண்டிச்
சிந்தனை யாக்கிப் பதிபசு பாசந்
தெரிந்திட லளிதமா வுரைத்துன்
திருவடி நீழன் மருவிட வைத்த
தேசிக சிகாமணி நீகாண்
ஐந்தலை யரவி னடித்தமா லீரைந்
தாதிய பிறவிநோய் தவிர்த்த
ஆவடு துறைசை யம்பல வாணு
வடியவர்க் கருளுமா நிதியே. (10)

கழிநெடில் முற்றிற்று.

சிவமயம்.

# குறிப்புரை முதலியன.

---

1. மலம்—ஆணவம். தடம்—தடாகம். கருமம்—கன்மமலம். சேதகம்—சேறு. மாயை—மாயாமலம். அங்குரித்து—தோன்றி, முளைத்து. மூவெட்டாம் தத்துவம்—நிலம் முதலிய இருபத்துநான்கு தத்துவங்கள்: அஃதாவது ஆன்மதத்துவம். வித்தை—சுத்தவித்தை. ஏழ்வித்தை—வித்தியாதத்துவம் ஏழு. ஈசன்—ஈசுர தத்துவம். சதாசிவம்—சாதாக்கிய தத்துவம். சத்தி—சத்தி தத்துவம். பதுமபீடிகை—தாமரையாசனம். எண்ணினேன்—கருதிய வனுகிய யான், வினையாலணையும் பெயர்.

" தத்துவம் முப்பத்தாறுக்கும் அப்பாற்பட்ட முதல்வனை இதயத்துட் கண்டு பூசிக்குமாறு யாங்ஙனம்? என்னும் ஆசங்கையை நீக்கி "அண்டபிண்டம் அவை சமம் ஆகலால்" அண்டத்தில் உள்ளன எல்லாம் பிண்டத்துள்ளும் சூக்குமமாய் உண்மையின், அண்டவடிவாகிய முப்பத்தாறு தத்துவங்களும் இதயத்திற் கமலரூபமாய் விளங்கும் ஆகலின், முப்பத்தாறு தத்துவங்களுக்கும் மேற்பட்டு அங்ஙனம் வியாபகமாய் வயங்கும் முதல்வனை அவ்விதயகமலத்தின் மேலாகக் கண்டு பூசித்தல் அமைவுடைத்து எனத் தெளிவித்தற்பொருட்டு அவ்விதய கமலத்தின் இயல்பு உணர்த்தி அதனை வலியுறுத்துவது காண்க."

" இதயகமலத்தின் இயல்பை உற்றறியப்புகின் நிலம் முதலிய இருபத்துநான்கு தத்துவமும் நாபியினின்றும் தோன்றும் எண்விரல் அளவைத்தாகிய நாள வடிவும், வித்தியாதத்துவம் ஏழும் சுத்த வித்தையும் ஆகிய

எட்டும் எட்டு இதழ் வடிவும், அவற்றின் மேற் கருதப் பட்ட ஈசுர தத்துவமும் சதாசிவ தத்துவமும் அறுபத்து நான்கு கேசர வடிவும், சத்தி தத்துவம் அக்கேசரங் களுக்கு உள்ளாகிய பொகுட்டு வடிவும், சிவதத்துவம் அப்பொகுட்டினுட் காணப்படும் ஐம்பத்தொரு பீசவடி வும் ஆகலான், அம் முப்பத்தாறு தத்துவமும் ஆசன மாகக்கொண்டு அவற்றின் மேல் நிற்கும் முதல்வன் திருவடிகள் அவ்விதயகமலத்தின்மேல் நிற்கும்." இதனைக் கீழ்வரும் சிவஞானபோத உதாரண வெண்பாவால் அறிக.

" மண்முதல் நாளமலர் வித்தை கலாரூபம்
எண்ணிய ஈசர் சதாசிவமும் — நண்ணில்
கலையுருவாம் நாதமாம் சத்தியதன் கண்ணும்
நிலையதிலாம் அச்சிவன்றாள் நேர். "

"நாட்டும்இத யம்தானும் நாபியினில் அடியாய்
ஞாலமுதல் தத்துவத்தால் எண்விரல் நாளத்தாய்
மூட்டுமோ கினிசுத்த வித்தைமலர் எட்டாய்
முழுஇதழ்எட் டக்கரங்கள் முறைமையினின் [உடைத்தாய்க்
காட்டுகேம லாசனமேல் ஈசர்சதா சிவமும்
கலாமூர்த்தம் ஆமிவற்றின் கண்ஆகும் சத்தி
வீட்டைஅருள் சிவன்மூர்த்தி மானுகிச் சத்தி
மேலாகி நிற்பன்இந்த விளைவறிந்து போற்றே."

சிவஞான சித்தியார் - சூத்திரம் 9 — செய். 9

இதன் விரிவைச் சிவஞான பாடியத்தும், சிவஞான சித்தியார் சுபக்கத்தும் ஸ்ரீ மாதவச்சிவஞான சுவாமிகள் அருளியமைகொண்டு காண்க.

"மோட்டித் தெழுந்ததோர் மோட்டுண்டம் மோட்டினைக்
கட்டுவிட் டோடி மலர்தலும் காணலாற்
பட்டுவிட் டம்மனை பாழ்பட நோக்கிட்டுக்
கட்டுவிட் டார்க்கன்றிக் காணவொண் ணாதே."

என்னும் திருமந்திரமும் இதனை வலியுறுத்தும்.

2. மணி—மாணிக்கம், பாம்பின் வாயில் உள்ள மணிபோல ஆணவமலத்தினால் விழுங்கப்பட்டுளது ஆன்மா. அவ்வாணவ மலத்தால் பற்றப்பட்டுள்ள ஆன்மா ஆசாரியனுடைய அநுக்கிரகத்தின் வழிநின்று அப்பகையைத் தீர்த்து அடக்கும் முறையில் அடக்கி அத்துவித பாவனையைக்கொண்டால் சிவபிரான் நீங்குதலைச் செய்யான் என்பது. அந்த அனுக்கிரகமே இங்குக் கூடியபடி.

"பாம்பு மதியைத் தினலுமப் பாம்பு
தீங்குக் கதிரையும் சேரத் தினலுறும்
பாம்பும் மதியும் பகைதீர்த் துடன்கொளின்
நீங்கல் கோடானெம் நெடுந்தகை யோனே."

என்னும் திருமந்திரத்திற் காண்க, இங்கே பாம்பு என்றது ஆணவமலத்தை. பாம்பின் வாயில் உள்ள மாணிக்கத்தை வெளிப்படுத்துவார் போல ஆணவமலத்தினின்று ஆன்மாவாகிய என்னை வெளிப்படுத்தி என்க.

ஈரைந்து—தசகாரியம், அவை தத்துவரூபம், தத்துவ தரிசனம், தத்துவசுத்தி, ஆன்மரூபம், ஆன்மதரிசனம், ஆன்மசுத்தி, சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம், சிவ போகம் என்பன. இவற்றின் விரிவை இவ்வாதீனத்துப் பண்டார சாத்திரமாகிய ஸ்ரீ அம்பலவாண தேசிகர்

தசகாரியம், ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி தேசிகர் தசகாரியம், ஸ்ரீ சாமிநாத தேசிகர் தசகாரியம் நோக்கி அறிக. இந் நூலாசிரியராகிய ஸ்ரீ உலகுடைய நாயனாருக்கு ஞானாசிரி யர் மேற்குறித்த ஸ்ரீ அம்பலவாணதேசிக மூர்த்திகளே ஆவர். ஐந்தொழிலாவன-படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்பன. இதனை :—

" அரன்துடி தோற்றம் அமைத்தல் திதியாம்
அரனங்கி தன்னில் அறையிற்சங் காரம்
அரனுற் றணைப்பில் அமருந்திரோ தாயி
அரனடி என்றும் அனுக்ரக மேன்னே. "

என்னும் திருமந்திரத்தாலும்,

" தோற்றம் துடியதனில் தோயும் திதிஅமைப்பில்
சாற்றியிடும் அங்கியிலே சங்காரம் — ஊற்றமா
ஊன்று மலர்ப்பதத்தில் உற்ற திரோதமுத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு. "

" மாயை தனைஉதறி வல்வினையைச் சுட்டுமலம்
சாய அமுக்கிஅருள் தானெடுத்து — நேயத்தால்
ஆனந்த வாரிதியில் ஆன்மாவைத் தானழுத்தல்
தான்எந்தை யார்பரதம் தான் "

என வரும் உண்மை விளக்கச் செய்யுட்களாலும் அறிக.

3. அவத்தை—கேவலம், சகலம், சுத்தம் என்பன. அவத்தையில் இழிதல் கருவியிற் பிரிதலும், அவத்தையில் திரும்புதல் கருவிகளோடு சேர்தலும் ஆம். தா இலா அறிவு—குற்றமில்லாத அறிவு. பாசமும் பசுவும் ஆம் ஞானம்—பாசஞானம், பசுஞானங்கள். நாட்டம்—கண். முகிழ்த்து—மூடிக்கொண்டு.

" நிட்டை யாவது நெட்டுயிர்ப் பறவுடல் நிமிர்த்து வார் விழிமூடிப், பட்ட வாயில்நீர் வறந்திட வடதிசை பார்த்துறைந் திடும்யோகோ, சட்ட கத்தினைப் பிரிந் துளப் பதைப்பற்றுச் சாக்கிரா தீதத்தே, சுட்டி றந்து நின் றிளசைநா யகன்கழல் சூழ்ந்திடும் செயலன்றே" என வரும் ஸ்ரீ மாதவச் சிவஞான சுவாமிகள் திருவாக்கு நிட்டையின் இலக்கணத்தை நன்கு எடுத்தோதுதல் காண்க.

4. நாலு கை—நான்கு திருக்கரங்கள். நாலு கை—அணைத்த கரம்; அமைப்பு—அமைத்த கரம் அபயம், துடி—உடுக்கை; முளரி—அக்கினி. நளினம்—தாமரை. நாட்டி—ஊன்றி. மலர்க்காய் நாசி கை வேழம் எறிந்தது—திருத்தொண்டர் புராணத்து எறிபத்தநாயனர் வரலாற்ருல் அறிக. சினகரம்—கோயில். அயன்தரு புதல்வர்—சனகர், சனற்குமாரர், சனுதனர், சனந்தனர் என்பவர்.

5. சிந்தை மெய் வாக்கு மூன்றினும் உயிர்கள் செய் வினை—மனம் வாக்குக் காயங்கள் மூன்றினுலும் ஆன்மாக்கள் செய்த நல்வினை தீவினைகள். நந்திடா—கெடாத. கைம்மாறு—பிரதியுபகாரம்.

6. கரும்பொன்—இரும்பு. கதிர்—சூரியன். படிகம்—பளிங்குக்கல். கருணையின்—அருளினுலே. படிகமானது தன்னிடத்தில் கூடின வன்னங்களிலே மேலிடத் தனக்கு எப்பொழுதும் சுபாவமான சொரூபத்தைக்கரந்து தன்னை அடுத்த பதார்த்தத்தின் தன்மையே காட்டி நிற்கும். அதுபோல, மாயையின் காரியம் ஆகிய இந்திரியத்திற்கு வேறுபட்டிருக்கிற ஆன்மா அதனைக் கூடிய இடத்து தனக்குச் சுபாவமாயிருக்கிற வடிவை மறைத்த இந்திரியங்களையே காட்டி நிற்கும். ஆன்மாவைப் படிகத்துக்கு

2751



உவமித்ததுபோல அதிற் பிரகாசிக்கும் வன்னம் பாசத்தினுக்கும், ஆதித்தப்பிரகாசம் திருவருள் ஞானத்துக்கும் உவமைகள் ஆம்.

இனி, பல நிறங்களையும் தன்னிடத்திலே கவர்ந்து கொள்ளுகிற அநாதியே உடைத்தாகிய படிகத்தினது நிலை பெற்ற பிரகாசத்தினையும், அந்தப் படிகத்திலே பொருந்தப்பட்ட பல வன்னங்களும் அதிலே பிரதிபிம்பம் செய்து நிற்கிற முறைமையினையும், அவை இரண்டையும் கூட்டிக் காரியப்படுத்துகிற ஆதித்தப் பிரகாசம்போல பிரபஞ்சம் ஆகிய பாசங்களையும் ஆன்மாக்களையும் தன்னுடைய சேட்டையாலே கூட்டிக் காரியப்படுத்தி நிற்கிற திருவருள் ஞானமானது அப்படிக் கூட்டிக் காரியப் படுத்தி நிற்கச்செய்து, முற்கூறிய உவமானத்தில் படிகத்தையும் வன்னங்களையும் கூட்டிக் காரியப்படுத்தின ஆதித்தப்பிரகாசமும் அவற்றில் தோய்வற்று நின்றாற் போல சடமாகிய பாசமயக்கம் தன்னை வந்து பொருந்தாத படி தோய்வற நிற்கிற திருவருள் ஞானமே மேலான உண்மை ஞான என்க.

7. அன்னை—உமாதேவியார். பசுவடிவாக வந்த உமாதேவியாருக்கு அவ்வடிவத்தை மாற்றி முன்வடி வந்தந்து அணைத்தமையால் அணைத்தெழுந்த நாயகர் என்னும் திருநாமம் பெற்ற வரலாறு நினைவு கூர்தற் குரியது. ஆ அடு துறை — பசுவடிவை மாற்றிய இடம் என்றபடி. ஆன்மபோதத்தை அகற்றிச் சிவஞானம் அளிக்கவல்ல தலம் என்பது குறிப்பு.

"கன்னலங் கழனிக் காழிமா நகரிற் கவுணியன் இரண்டு ஞானமுமே கற்றிடாதுணர" என்று அருளிச் செய்திருப்பதால், திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர் புராணத்திலே :—

"சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம்
பவமதனை அறமாற்றும் பாங்கினில்ஓங் கியஞானம்
உவமையிலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்
தவமுதல்வர் சம்பந்தர் தாம்உணர்ந்தார் அந்நிலையில்"

என்ற திருப்பாடலிலே கூறிய ஞானம் இரண்டே எனக் கொண்டு ஸ்ரீ மாதவச் சிவஞான சுவாமிகள் மாணவருள் முதன்மை பெற்ற கவிராக்ஷஸ ஸ்ரீ கச்சியப்ப முனிவரர் தாம் அருளிய திருத்தணிகைப் புராணத்திலே :—

" மேவருஞானம் இரண்டவற் றென்று விமலனார்
[பாததா மரையே
ஓவறும் அன்பின் உணர்திரு அளிக்கும் ஒப்பிலா
[உயர்கலை ஞானம்
தாவரும் பவத்தை வேரோடுங் களையும் தக்க மெய்ஞ்
[ஞானமொன்று "

என அந்நுவயம் செய்து கூறியருளினார்கள்.

8. தணவிலா — நீங்காத, மலம்குருடு, உடலம் கோல். என்னையும் உம்மை இழிவு சிறப்பு. இரண்டற— இரண்டறக்கலந்து அனுபவிக்கும் சுத்தாத்துவித நிலை என்க. " செம்புறு களிம்பு என அநாதி மலம் மூழ்கி இருள்சேரு மலர்விழி என்னவே, தெளிவற்ற கேவலத்து அசைவற்றிருந்து மலசேட்டையால் குழவி குருடர்—, தம் பிணியினாலுற்ற பால் கோலை நோக்க அவை தமை அளிப்பா ரென்னநான், சார்கன்மம் மாயையை விரும்பநீ தந்திடச் சகலனாய்ச் சுழல்கறங்கு—, பம்பரமதென்ன நீள்பிறவிச் சுழிக்குளே பட்டுழல் பெரும்பாவியேன், பாழான மலமற்று வினையற்று மாயையின் பற்றுவிட்டு எனையறிந்துன்—, அம்பொனடி நீழல்சேர்ந் தானந்த முண்டுநான் அதுவாயிருப்ப தென்றோ, அருண்ஞான

வாரியே ஆசை மேவிய செல்வ அகிலாண்டமென்னு மரசே" என்ற பாடலில் கேவலநிலை சகலநிலை சுத்த நிலைகளைக் குறித்துள்ளமை காண்க.

ஆணவமலத்தின் காரியம் நான் எனும் அகந்தை. கன்ம மலத்தின் காரியம் நல்வினை தீவினைகள். மாயா மலத்தின் காரியம் ஊனுரும் உடற்சுமை என அறிக. மாயையானது, ஆன்மாக்களுக்கு முதல்வனுடைய ஞான மாகிய கிரணம் தோன்றி ஆணவ இருள் நீங்குமளவும் தன்னிடத்தினின்றும் தனு கரண புவன போகங்கள் அவரவர் புண்ணிய பாவங்களுக்கு ஈடாகத் தோற்றிச் சிறிதே மல இருளினை நீக்கி விடய இன்பங்களைக் காட்டும் விளக்கைப்போன்றது.

9. அருந்திறல் மலம்—போக்குதற்கரிய வலிமை பொருந்திய ஆணவமலம் என்க. அறிவினைத் திருப்புத லாவது ஆன்மபோதமின்றிச் சிவபோதமாகச் செய்வது.

10. முந்தும் ஆகமம்—பழமையான ஆகமம். முதன் மையாக வைத்தெண்ணப்படுவது எனினும் பொருந்தும். சத்திநிபாதத்து உத்தமர்க்கே உரியதாகலின் முந்தும் ஆகமம் என்ருர். அருட்டுறை அண்ணல்—திருவெண் ணெய் நல்லூரிலே அவதரித்தருளிய ஸ்ரீ மெய்கண்ட தேவர். திருவெண்ணெய்நல்லூர் தலம்; திருவருட்டுறை கோயில். மொழிபெயர்த்துரைத்த நூல் — சிவஞான போதம். சிவஞானபோதம் முதனூல், சிவஞான சித்தி யார் வழிநூல், சிவப்பிரகாசம் சார்பு நூல். சிந்தனை ஆக்கி — பாரம்பரியமாக வந்த உபதேச உரையைச் சிந்தனையுரையெனத் தந்து என்றபடி. சிவஞானபோத சிந்தனை — சிவஞான சித்தியார் சிந்தனை — சிவப்பிரகாச சிந்தனை என்பன அவை. லளிதமா—எளிதாக யாவரும் அறிந்துகொள்ளுமாறு.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருவெண்பா.



சிவபுரம் - பெரிய பிள்ளை.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## சிவபுரம் - பெரிய பிள்ளையவர்கள்

அருளிச்செய்த

# திருவெண்பா.

—— ० ——

அந்தமலத் தத்துவித மானபணி யாலகற்றி
வந்தமலத் தத்துவிதம் வைத்தாயே - எந்தாய்
திருவா வடுதுறைவாழ் தேசிகா பொய்யில்
மருவாத வம்பலவா ணா. (1)

உன்போகந் தந்தா யுனக்குவினை யேனருந்தும்
என்போகந் தந்தேனென் னீசனே - இன்புருவா
கைம்மாறுண் டாமோ கவினு வடுதுறையின்
அம்மானே யம்பலவா ணா. (2)

ஆதிவரு ணத்தா லரியா லுனையிழந்த
பாதகருக் கேநிரயம் பாலிப்பாய் - நீதியுடன்
தானந்த மானவரைத் தற்பரமாய் விட்டகலா
ஆனந்த வம்பலவா ணா. (3)

இருளிரவு தீப மிவைமூன் றடங்க
வருகதிர்போ லேமூன்று மாயத் - தருஞான
பானுவாய் வந்தவனே பண்டா வடுதுறைவாழ்
வானவனே யம்பலவா ணா. (4)

முத்தியி லுன் செய்கையைப்போன் மூன்றுமல [முந்தவிராப்
பெத்தமுமுன் செய்கையெனப் பேசுவார் - சத்தியமே

காணுத மூடர்கண்டாய் காவா வடுதுறையில்
வாணுநம் மம்பலவா ணு. (5)

அஞ்சா மவத்தைதனி லாணவம்போ மென்றுரைப்பார்
எஞ்சாச் சரியாதி யெண்ணியான் – வஞ்சமலம்
முன்னகற்று மாறறியார் மூடர்கண்டாய் தென்றுறைசை
மன்னவனே யம்பலவா ணு. (6)

ஆதியே தென்றுறைசை யம்பலவா ணுவெனீநீ
பேதமறக் கூடிநின்ற பெற்றிதனை – ஓதிலது
சாக்கிரா தீதந் தருமான்ம லாபமின்பம்
ஆக்குசிவ போகமென லாம். (7)

அத்தனே தென்றுறைசை யம்பலவா ணுவமைந்த
சித்த முருவிரண்டுந் தீபமென்ருய் – சுத்தத்தில்
ஒன்று பதார்த்தமா மொன்றுநின் ஞேடொன்றும்
ஒன்றுமன வாதே யுரை. (8)

மருளிற் பிறந்து மயங்குமெனை யுன்றன்
அருளிற் பிறப்பித்தா யையா – பொருளான
நானுனக்கென் செய்வே னவிலா வடுதுறைவாழ்
வானவனே யம்பலவா ணு. (9)

அந்தந் தெரியா வசிந்திதநீ சிந்திதனு
வந்துன்ஞே டென்னை வசமாக்கிப் – பந்தமுறும்
சித்த முதற்கரண மெல்லாந் திருவருளாய்
வைத்தனையே யம்பலவா ணு. (10)

திருவெண்பா முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# ஸ்ரீ அம்பலவாண தேசிகர் ஆனந்தக் களிப்பு.



மதுரகவி

தொட்டிக்கலை - ஸ்ரீ சுப்பிரமணிய முனிவர்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்,

# ஸ்ரீ அம்பலவாண தேசிகர்

## ஆனந்தக்களிப்பு.

---

1. ஆனந்தந் தந்தமை பாரீர் — எங்கள்
அம்பல வாண வருட்குரு ராசன்
ஆனந்தந் தந்தமை பாரீர்.

2. பருவ மளவற்ற காலம் — என்னைப்
பார்த்திடுந் தான்றன்னைப் பார்த்திடுங் காலம்
குருவடி வாயொரு கோலம் — இங்குக்
கொண்டுவந் தென்னையாட் கொண்டருண்
[மூலம் (ஆனந்)

3. மும்மலக் கோட்டை யிடித்துப்—பொய்யின்
மூழ்கிக் கிடந்த வெனைக்கைப் பிடித்துச்
செம்மணி மன்று ணடித்து — நிற்குந்
திருவடித் தாமரைத் தேனென்னுள் வடித்து (ஆனந்)

4. எனது மனதினைத் தேற்றிப் — வைய
வேருக் குழிநின்று மெனையெடுத் தேற்றிச்
செனன விடாயினை மாற்றி — மெள்ளச்
செப்பாத சொல்லென்றன் செவியுறச் சாற்றி (ஆன)

5. என்னிரு வல்வினை யோட்டிக் — கன
விந்திர சால மூலமென்று காட்டித்
தன்னிரு தாளிணை சூட்டி — யொன்றித்
தன்மை யறிந்தவர் தம்முடன் கூட்டி (ஆனந்)

6. அன்றுதொட் டென்னை யடுத்து — நான்
ஆடுந் துறையெல்லா மோட விடுத்து
இன்று தனக்குட் படுத்து — வெனக்
கெங்கெங்கு பார்க்கிலுங் காட்சி கொடுத்து (ஆன)

7. பரசம யத்துக்கோர் சிங்கம் — சுற்றும்
பவக்கடல் வீழ்ந்தோரைக் கரையேற்றும் வங்கம்
கருதின தருமொரு சங்கம் — தூக்கிக்
கனலி லுருக்கி யுரையாத தங்கம் (ஆன)

8. தேவர்கள் போற்றுமுல் லாசன் — அன்பர்
சித்தத்து ளூறித்திக் திக்கும் விலாசன்
ஆவடு தண்டுறை வாச — னிந்த
அம்புவிக் கெல்லா மருட்குரு ராசன் (ஆன)

9. திக்கெட்டும் போற்றுஞ் சரணன் — தன்னைச்
சென்றடைந் தோர்களைத் தாங்குமோ ரரணன்
அக்கு மணியா பரண — னன்பர்க்
கமிர்தப்பிர வாகத்தை யளிக்கும்வி தரணன் (ஆன)

10. பாசத் தளையை முறித்துக் — கோடி
பருதிப்பிர காசமா யுள்ளே யெறித்து
ஆசுற்ற வேரைப் பறித்து — மெய்ம்மை
யன்பரோ டென்னையு மாளாக் குறித்து (ஆன)

11. நானென்ற தானென்ற தற்றுச் — சிவ
ஞானப்பிர காச வெளியிடை யுற்று
ஆனந்த நித்திரை பெற்று — நிற்கும்
அடியாரோ டென்னையும் வாவென் றழைத்து (ஆன)

12. பஞ்ச மலக்கொத் தறுத்துக் — கொடும்
பாவியேன் செய்பிழை யெல்லாம் பொறுத்து
நெஞ்சி னினைவை நிறுத்து — வினை
நேர்வந்த காலந்தன் னருளுள் ளுறுத்து

ஆனந்தந் தந்தமை பாரீர் — எங்கள்
அம்பல வாண வருட்குரு ராசன்
ஆனந்தந் தந்தமை பாரீர்.

ஆனந்தக்களிப்பு முற்றிற்று.

